## திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்

திரையேற விட்டகற்றான் புணர்ப்பறச்சொற்
றுணைப்பதிகந் திருந்தப் பாடி
விரையேற விட்டநறை யிதழிமுடி
யரனருளால் வென்றி மேவ
இரையேற விட்டசம ணறவுயிர்கள்
பவக்கடனின் றென்று மேறக்
கரையேற விட்டபிரான் புகழ்விளைத்த
நாவரசைக் கருதி வாழ்வாம். உஅ

## திருச்சேந்தூர்ப் புராணம்

கலக மிடும்பொய்ச் சமணர்குழாங்
கட்டிக் கடலி னிடைபுகுத்த
உலகம் பரவ விடுத்தகல்லே
யுயரும் புணையாக் கரையேறி
இலவ விதழ்ேலார் பங்கமைத்த
எம்மான் கமலத்தாள் பழிச்சுஞ்
சொலவின் புணையாப் பவக்கடலுங்
கடந்தான் சரணத் துணை துதிப்பாம். உகூ

## உத்தரகோசமங்கைப் புராணம்

தொலையாத பவக்கடல்யாங் கடத்துமெனப்
பிறர்க்குணரச் சொல்வார் போல
நிலையாத புறச்சமயக் குறும்பரிறு
குறப்பிணித்த நெடுங்கல் லோடு

---

(உஅ) இரை - இரைத்தல்.

மலையாடு பெரும்பரவை யழுந்தாதக்
கன்மிதப்பா யாழி நீந்தித்
தலையாய பொருளுணர்ந்த வாகீசர்
மலர்ச்சரணஞ் சரண மாதோ. ௩0

## கடம்பர்கோயிற் புராணம்

ஞானந்தங் கருணீருண் டமண்பாழி
யிடித்துவினை கறுத்தெஞ் ஞான்று
மீனந்தங் குலகாசைக் கடுங்கோடை
யிரிந்தோட வெம்மான் சைவத்
தானந்தங் கருட்செல்வந் தழைத்தோங்கத்
தாண்டகச்சீர்ப் பதிக மென்னும்
ஆனந்தம் பொழிமுகிலை யகமலரத்
தொழுதுவினை யகன்று வாழ்வாம். ௩௧

## சிவராத்திரி புராணம்

காவரசு மலரயன்மால் கடவுளர்க்காச்
சென்றமர்செய் காம னைமம்
பூவரசு படவிழித்துப் புனவேங்கை
யத்தியதள் புனைந்து போர்த்த
தேவரசு மனமகிழத் திருப்பதிக
மிசைத்தமிழிற் சிறக்கப் பாடு
நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன்
னட்டரசு நல்கு மன்றே. ௩௨

## புலியூர்ப் புராணம்

வில்லரைய னஞ்சமொடு நீற்றறைவெவ்
வேழமுன மேவப் பண்ணிக்
*கல்லரையி னுறப்பிணித்துக் கடல்வீழ்த்த
அதுபுணையாக் கருணை செய்ய

---

* கல்லரை - கற்பக்கம்.